உ

முருகன் துணை.



திருப்பணி நயினார்

# மயில்விடு தூது.

---

சென்னை.

உ

முருகன் துணை

நீலங்கொள் மேகத்தின் மயில்மேலே
நீவந்த வாழ்வைக்கண் டதனாலே
மால்கொண்ட பேதைக்குன் மணநாறும்
மார்தங்கு தாரைத்தந் தருள்வாயே
வேல்கொண்டு வேலைப்பண் டெறிவோனே
வீரங்கொள் சூரர்க்குங் குலகாலா
நாலந்த வேதத்தின் பொருளோனே
நானென்று மார்தட்டும் பெருமாளே

திருப்புகழ்

திருப்பணி நயினார்

# மயில் விடு தூது

இளசை. ஸ்ரீ திருமலைச்சாமி
இயற்றியது.

சென்னை,
21—3—29
மகாமகோபாத்யாய, டாக்டர்
உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்.

உ

# சுகமயம்.

ஹரிகேசநல்லூர் ஷண்முகாநந்த சபைச்சார்பில் நடைபெற்ற
ஸ்கந்தஷஷ்டியில் இந்நூலை அரங்கேற்றியபோது
ப்ரம்ம-ஸ்ரீ முத்தைய பாகவதர் அவர்கள்
அன்புடன் அளித்த தங்கமெடலுடன்
ஸ்ரீமான் திராவிடகேசரி இராமசாமி பாரதியவர்கள் குமாரர் ௨
ஸ்ரீமான். அப்பாவைய பாரதியவர்கள் அருளிய

சாற்றுக்கவி

சீரார் கமலை விழைவாகத்
தினமுந் திருமா துளவாக
வாரார் ஒருநான் கெனும்வாக
வாறுங் கருடப் புள்வாக

வாரார் பொன்னம் பல்வாக
மந்தே ரயன்வேள் மகிழ்வாக
காரா கவனேர் திருமலையான்
கவியால் விடுத்த மயில்தூதாம்

இனிப்பா மாலை யெனவுலகோர்
ஏத்துந் திருமலைச்சாமி ட்
தனிப்பா மாலைக் கவிமுப்பால்
சாத்தி மகிழ்வாய்ச் சாற்றினன்காண்
பணிப்பா மாலை காலையிலே
படிப்போர்க் கருள்மெய்ஞ் ஞானமுண்டா
செனிப்பா மாலை யகற்றுமதி
சிறக்கும் திருவும் செழித்திடுமே

உ

சிவமேதுணை.

# நூலைப்பற்றிய அபிப்பிராயங்கள்.

---

தெய்வத் திருநெறிய தமிழ் இக்காலம் கூடியவரை ஒழுங்குபெற நடைபெறும் திருநெல்வேலி என்னும் சிவபுரம் தமிழ்மக்கள் ஒவ்வொருவர் அறிவிலும் மனத்திலும் திகழ்வது இதன் நடுவே வாய்ந்த திருக்கோவில் இமயம், குமரி என்னும் எல்லை வாய்ந்த நம் நாட்டுப் பெரிய திருக்கோயில்களுள் ஒன்று. இக்கோவில் மேலைச் சூழலில் கண்கவர் வனப்புவாய்ந்த திருவுரு ஒன்று தமிழ்த் தெய்வமாகிய முருகற்கு உண்டு; அத்திருவுரு ஒரு கல்லில் ஆறு

அழகிய திருமுகமும், மற்றும் ஒவ்வொரு உடல் வகுப்பும்; அவ்வழகற்கேற்ப அழகுற அமைந்து, அம்மையார் இருமருங் கமைய, மயில் தாங்க உள்ள தன்மையைக் கண்டவர் ஓவியத் திறன் வியப்பும் மனக்கசிவும் பதிந்தநிற அன்பும் பொருந்தி வாழ்வர் என்பது ஒருதலை. இதனை நம் அய்யங்கார் அவர்கள் தம் மயில்விடுதூதில் "நானறியக்,

கல்விக் கிரகமெனக் கண்டவருட் கொண்டாலும் 
கல்விக் கிரகமவன் காண்மயிலே"

என்ற கவிப்பண்பாக்கண்ணி தெளிவுற விளக்குவது என்னது சிற்றிளம் பருவந்தொட்டுப் பலருங்கூற யானும் கண்டுள்ள உண்மையுமாம்.

இக்கடவுளிடத்து அன்பு பூண்டாருள், இக்கடவுட் டிருமுன் பணிபல இயற்றிப் பத்திமையும் அடிமையும்

கொண்ட அமாவாசைப்பரதேசி என்னும் பெரியார் ஒருவர். இவர் இங்கு முருகனைக்காணவரும் அன்பர் திறனும் செயலும் கண்டு பலபணி அமைப்பார். அவருள் ஸ்ரீ திருமலைச்சாமி அய்யங்கார் அவர்கள் என்னும் தமிழறிஞர் ஒருவர், அய்யங்காரவர்கள் பன்னூற் றுறைகண்ட செம்மையினர். தவத்திற் பெருகி அடங்கொணா ஆண்மை கொண்டு பல்லண்டம் பகுத்தாண்ட சூரபதுமனின் சூரக் கூறாகிய மயிலினையே இக்கடவுளிடம் "தூது" அனுப்புவதாகிய நூலியற்றினர்; தமிழ் நயம், பன்னூலறிவு, அன்பு திறம் பாட்டுரிமை இன்னின ஒருங்கே நிரம்பித் திகழ்வது இந்நூல்.



நமது அய்யங்கார் அவர்கள் பண்முறை இன்னிசை பாடுவார்க்கேற்ப, "முருகன் கிளிக்கண்ணி" என ஒரு நூல்

இயற்றினர். அந்நூலில் முருகன் ஆடல்கூறும் ஆன்றோர் பலர் கருத்தையும் மொழியையும் பொன்னெனப் போற்றியுள்ள தன்மை யாவரும் வியக்கத்தக்கதே

(ஒப்பம்) காருடை சு. சூரியமூர்த்தி பிள்ளை,
(7th Sep. 1927) மதுரை.

திருவாளர் திருமலைச்சாமி ஐய்யங்காரவர்கள் இயற்றிய 'மயில்விடுதூது' என்னும் அரிய நூலைக் கண்ணுற்றேன். முருகனிடத்தில் தூது சென்று அவன் திருவருளை எளிதிற்பெற்று வரும் மாண்பும் ஆற்றலும் மயிலுக்கே உரியதெனக்கண்டு மயிலைத் தூதனுப்பிய இந்நூலாசிரியரின் நுண்ணறிவு மிகப்பாராட்டத் தக்கது. நூலை வாசிப்போருக்கு ஆசிரியருடைய அறிவும் ஆற்றலும் கல்வித்திறனும்

பத்திநிறைவும் எளிதிற் புலப்படும். "நூலறி புலவ"ராம் நமது ஆண்டவருக்கும் இந்நூல் மிகவும உகந்ததாம் என்பதில் ஐயுறவில்லை. பத்திச் சுவைநிறை பல பாமாலைகள் உலகுக்கு இவர் இவ்வாறே நிரம்ப உதவுமாறு எம்மை யாளும் செவ்வேற் சேய திருவருள் புரிவாராக.

ஒருமலை கூறெழ வேல்வாங்கி ஞான யுண ருமன்புங்
கருமலை செந்நெறி யீதென்றுங் காட்டிய காரணத்தால் ௮
அருமலை வாழைபோற் றெண் டைமட் டன்றியே அங்க
மெல்லாம்
திருமலைச்சாமி மயில்விடு தூது தித்திக்குமன்றே.

(ஒப்பம்) வ. சு. செங்கல்வராய பிள்ளை எம்.ஏ.

(7-12-1928) சென்னை.

உ

முருகன் துணை.

# திருப்பணி நயினார்

# மயில்விடு தூது

## காப்பு

சித்தி விநாயகனைச் சீர்த்தகண நாயகனைப்
பத்தியினாற் பாதம் பணிகின்றேன்—நத்துமயில்
தூண்டுங் குமரற்குத் தோகைமயில் தூதுசெல்ல
வேண்டுந் தமிழ்தழைய வே.

தாதுற்ற தண்கடப்பந் தார்புனையும் வேலவன்மேல்
மாதுற்றுப் பச்சை மயிலைவிடு—தூதுக்குக்
கங்கையொடுதிங்கள் பணி தங்குசடைச் சங்கரன்மெய்ச்
சங்கரியென் மீனாட்சி சார்பு.



## நூல்.

பூமேவு பச்சைப் புயல்வண்ணன் புண்டரிக
மாமேவு மாயன் மகிழ்மருகன்—பூமேவு
வேதனை வெஞ்சிறையில் மேவவிட்டான் விஞ்சையாற்
கோதா வுயர்ந்த வொருபெருமான்—தீதான
சூர்க்குஞ் சுற்று துணைவர்க்குஞ் சூழ்கிளைஞ்சப்
போருக்குந் தொட்ட பொருவேலோன்—நேருற்ற
சேவற் கொடியுடைய சேய்; வள்ளி காதலன்; என்
ஆவற் குரிய அருநிதியம்—தாவற்ற
ஆதவன்போ லுற்றார் அகவிருளை யோட்டிமிளிர்
மாதர் வடிவம் மருவிளைஞன்—ஆதாவாய்த்

துற்ற புலவோர் துயர்தீர்த்த சோதிநெடுங்
கொற்ற மிகுவேற் குலக்குமரன்—உற்ற
குடமா முனிக்குங் குருவாந் தமிழைத்
திடமா வுபதேசஞ் செய்தோன்—அடல்சேரும்
ஞானகுரு வாயுலகம் நாடி அடிபணியுந்
தானமுற நெல்லைநகர்த் தாயகத்தான்—ஆனமரும்
அஞ்சு முகத்தார்க் கினியான்; அமரகத்தே
அஞ்சு முகத்தாருக் காறுமுகன்—செஞ்செவே
சாறபர்வார் வேடர் சரிகுறவர் எல்லாரும்
வீறயா வேவைத்த வெல்கழலோன்—ஏறுகின்ற

தாய தனிமேக சாலமுறத் தாளுடுந்
சாயல் தழைத்த தனிமயிலே!—நீயவிடப்
பாந்தட் படங்கிழிப்பாய் பார்மேவும் பேதையர்கட்
காங்கள் மயக்கற்றும் ஆய்மயிலே—காந்தளெனும்
மெல்விரலார்க் கொப்பெடுக்க வேகவினி யோங்குகின்ற ௩௰
வல்விரகார் காதல் வனமயிலே—சொல்லரிய
உன்பெருமை யாரே உரைப்பார்கள் இப்புவியில்?
உன்பெருமான் புற்றே உரைத்ததக்கேள்—உன்னரிய
உன்னாலல்லவோ உயர்தேவர் இந்திரனும்
தன்னாலமே நயந்ததுவும்—பன்னரிய 30

மேன்மைக் குவந்தாய் மிகவாக முன்னுனது
மேன்மை குறித்தே மிளிர்கீரன் —பான்மைபெற
ஆற்றுப் படைமுழக்கி ஆனுத இன்பமெலாம்
ஏற்றும் இனலகற்ற ஏய்ந்ததுவும்—போற்றரிய
கண்ணு யிரம்படைத்துக் காசினியி லெண்ணினிரு
கண்ணு லளக்கும் களிமயிலே —விண்ணுர்
மயூர மனமகிழ்ந்து மல்குசிறை நீட்டும்
மயூர மலிசெல்வ மன்னே—தயூரப்
பணிமுகமே தோராப் பசுக்களையும் முன்னும்
பிணிமுகமே செய்துகக்கும் பெட்பின்—பிணிமுகமே

நீயுற்ற மேவும் நிலையதுபோற் சாலவே
நோயுற்று நாளும் நுடங்குகின்றேன்—மீயுற்ற
வெய்ய கொடைக்கே வியந்து மகிழுனைப்போல்
ஐயன் கொடைக்கே அலமருவேன்—துய்யன்
உனையேறி நின்ற நிலையெல்லாம் முன்னம்
நினைவேறி நின்று துயிலேன்—இனைவேறிப்
பாரிற் குதட்டுரையே பாவிக்கும் பச்சையிளங்
கீரக் குரைத்தாற் கிளர்வாமோ?—நீரருகே
கால்முடக்கி நிற்குங் களிகுருகுக் கின்றிசைந்தால்
மால்முடக்கு மந்தோ மகிழ்வாமோ?—சூல்கொண்ட

மேகந் தனக்கே மிளிர வகுத்தக்கால்
ஆகும் பொருள்மற் றதற்குண்டோ?—வாகுடனே
மங்கையரை யங்கே மலிவித்தால் என்மயிலை
அங்குரைக்கு மாற்றல் அவர்க்கேது?—தஞ்சரிய
காதல் பெருக்கிக் களிக்குங் கருங்குயிலுந்
தூதனாக வென்றால் துயரன்றோ?—மோதியுறுந்
தென்றல் தனையிதனைச் செப்பென்று விட்டக்கால்
சென்று திரும்பும் திறமுளதோ?—துன்றுமளி
தன்னைநான் கூவித் தகவழைத் தாலுமது
என்னைக் கவனியா தேகிடுமே?—அந்தோபின்

என்ன பொருளை எதனைநான் செல்லவிடுத்
தென்னுள் மையலை இயம்புவிப்பேன்—சொன்னயம
தாச்சுமந்து நல்ல தகுபாட லின்வகையால்
நாச்சுயந்து பாடுகின்ற நாவலர்போற்—பேச்சுனக்குச்
சொல்லும் படியறியேன் தூதாக உன்னையே
செல்லும் படியாகச் சேவித்தேன்—மல்லல்கெழுங்
கார்கண் டுவக்கின்ற கார்மயிலே! ஐயனாருந்
தார்கொண்டு வந்தால் தவிப்பொழிவேன்—நேர்கொண்ட
விண்ணப்ப மீதே விளம்புகின்றே னிப்புவியில்
நண்ணிக் கெடுப்பார் நனியுளரால்,—திண்ணமாய்த்

தாமீய மாட்டார், பிறரீகை தாம்விலக்கிப்
போமீர மில்லார் புகுதாமுன்,—தாமீறு
வேலர் விளங்கிழையார் வெய்யரவ ரேறுகின்ற
கோலத் தடந்தோகை சூர்மயிலே—ஞாலத்தில்
செல்வாக் குடையார் பிறர்க்குதவி யெவ்விடத்தும்
ஒல்லும் படியுஞற்ற ஒட்டாரோ?—அல்லல்தவிர்
நைடதனும் மாருதியும் நற்றேவர் எல்லாரும்
உய்விடத்துத் தூதுரைத்த தோராயோ?—கைவிடுத்துப்
போவதுண்டோ கார்நீலப் பொற்புறழு மாமயிலே
தாவடைந்தார் தஞ்சமடைந் தக்காலம்—ஔவரிய

செல்வம் பெருங்கீர்த்தி செப்புகின்ற எல்லாமிங்கு
ஒல்லும் உதவியிலென் றோரயோ?—பல்நிறத்த
தோகையே வேலர் தொடர்மறுகு சென்றிடவந்
தோகையே நன்றிழந்தே னேகின்றேன்—ஓகையுடன்
செல்லுந் துணைவியருஞ் சேராத என்தாயும்
கொல்லும் பலதீக் குளிப்பிப்பார்—சொல்லரிய
சாயற் சிகியேநான் தாவுற்ற வன்றிலிடி
மேயிற் சகியேன் விளிகின்றேன்—மீயுற்ற
தித்தணியோ எலப் பசுமயிலே இத்தரையில்
மொய்த்தநெடு மோகினியே பூண்டதென்பார்-கைத்தரித்த

மகாமகோபாத்யாய, டாக்டர்
உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்

மாலையொடு பங்கை மலர்பறிக்கும் மாலையிலே
சோலையமர் சொக்குக் குயர்க்குமென்பார்—காலமுற
மங்கையரைக் காவா தயலனுப்பிக் கைகெட்ட
வெங்கோபர் எத்தனைபேர் மேதினியில் — எங்கோ
செலும்போ தெதுபிடித்துச் சேர்ந்ததென மேவா
வலும்போய் நகைவீங்க வாங்கே—சொலும்போதி
லென்ற வெறியாட்ட மென்றாள் ஒருமலடி;
கான்றுமிழுன் வேலாற்கும் காட்பினிலே—யான்றவகை
நற்பலிக ளிட்டால் நலமென் றுரைத்திட்டாள்
கொற்பகைவேற் கண்ணா ளொருநங்கை—இப்பகலே

“காராட் டுகிரங்கோ யன்னை களைழித்து
கீராடி நீங்கென்றால் நீங்குமோ?—போராட்டு
வென்று களங்கொண்ட வெஞ்சினவேற் கோதைக்கு
நெஞ்சங் களங்கொண்ட நோ”வென்று—வஞ்சியரும்
மேலான சோதிடனை மேவித் தெளிந்தக்கால்
தோலாத உண்மை துணிந்துரைப்பான்—பாலாகக்
காண்பா மெனக்கருதிக் காணற் கெனச்சிலரும்
நாண்பா விழுந்து நனிசென்றார்—பூண்பால
மானம் உலைப்ப மனமுலைந்து சோர்ந்திடநான்
ஆனபெருக் கூடா மயர்ந்தசிறு—பேனமென 110

ஆவி பிழைத்தே அயர்கின்றேன்; மேவரிய
காவி மழைபோல் களிமயில்மேல்— தாவியவர்
ஏதானு மாத்தெளிந்து வந்தாலு மெற்கதுதான்
தீதாக நொந்து திரிந்திடுமே—ஓதாத
தீக்கிளவி யோராது செப்பித் தருகென்று
தீக்கவவர் வந்து செறியாமுன்—காக்கவெனக்
காகப் பறைக்கூட்டுங் காடுகொளு மாலையெனை
நோகக் கவற்றி நுழையாமுன்—தீக்சுளிக்குஞ்
சேடியருந் தாயும் செறிந்தாவி போக்குதற்கு
நேடியெனை வந்திங்கு நேராமுன்—நாடியசீர்

வாழ்வளித்தே என்னை வளயயிலே அஞ்சலென்றித்
தாழ்விடத்தே யாதரித்தல் தக்கதுகாண்—சூழ்வறியும்
தேசிகமா ரும்மயிலே தேர்ந்திருகக் கட்டினுமென்
கோசிகமு மின்னே குலைவுறுவே—பேசிப்
பிழைக்க வறியாப் பெரும்பேதை இல்லத்
துழைக்கக் குழையும் உளமும்—இழைக்கின்ற ௨௩
மையற் களைப்பு மிரிந்தோடும் நிற்கண்டால்
ஐயமற வெற்புரத்த லாகாதோ?—மையல்விளை
கோலத் தனிமையிலுன் கோமானை யுற்றடைந்தென்
மாலைத் தவிப்பையெல்லாம் மாட்டாயோ?—தாலத்தில்

"தங்கட் குதவிலர்கைத் தாமொன்று கொள்ளினவர்
தங்கட் குரியவராற்" றாமென்றே—இங்கிதமாய்க்
கொண்டிடுதல் வேண்டுமெனக் கூறுவா ராதலினால்
மண்டியெனை ஆதரிப்பை மாண்புறவே—கண்டகவெம்
பாம்பை யடிப்படுத்துப் பார்மீ துலாவிமகிழ்
வாம்பைத்த தோகை வளர்மயிலை—காம்பெல்லாம்
விண்மீ னுறவிழல்போல் வீசொளியின் முத்தினத்தை
மண்மே லுதிர்க்கும் மலையகத்தே—எண்போது
தண்கடம்பந் தாங்கிக் கவினும் தருமார்பத்
தொண்ணிதியை யுத்தமனை யுற்றணுகித்-தண்ணமுதாம் 140

முத்தமிழுந் தேர்ந்துணர்ந்த மூதறிவர் சொன்மலையே!
சித்த மகிழுஞ் செகவீரா!—நத்தரசர்
கிட்டிப் பணியும் கிரீடாதிபா! கவிஞா!
கட்டமுகி வள்ளிக்கே காந்தனே—இட்ட
அருண கிரிபுகழை அன்பா யுகந்த
கிரணக் குழைசேர் கிளியாய்!—தருணிமகிழ்
இன்பகழிக் கூத்தா! விகடற் கிளையானே!
என்பகழிக் கூத்தன் இசைத்ததமிழ்க்—கன்பனே
தாயிறா வாமகற்குத் தக்க தமிழமுதம்
வாயினிக்க ஊட்டி வளர் வள்ளலே—நேய

மிகுந்தபசி யாகிநெல்லை மேவிமகிழ் தேவே
தகுந்தபசி காத்தழைக்குந் தாரு—தகவுறவே
பாடும் புலவர் பறுவற் பதந்தேர்ந்து
கூடுங் கொடையுதவுங் கொண்டலே—நாடுபன்னூற்
சீர்த்தி விளக்கும் சிவபால! சுப்ரமண்யா!
கீர்த்தி மலிந்த கிளர்மதியாய்!—நேர்த்திமிகுந்
தந்தையெனத் தாங்கத் தழைக்கும் பலவளமும்
நந்தாம லோங்கும் நகர்நெல்லைப்—பைந்தாமம்
தேனுகுக்குந் தெய்வத் தெரியல் புனைகின்ற
தேனு குலம்விளக்கும் தெய்வமே—நானறியக்

கல்விக் கிரகமெனக் கண்டவருட் கொண்டாலும்
கல்விக் கிரகமவன் காண்மயிலே—செல்விமகிழ்
பாரதிக்கு நற்றுணையாய்ப் பாடுந் திருமலைசொற்
சீரதிகந் தாங்குதமிழ்த் தெய்வமே—தாரணியின்
கோலத்த நெல்வேலிக் கோமானே கொற்றநெடு
வேலத்த மேவும் விதிப்பகையே—சாலவே
தம்மை நினைப்பவர்கள் தம்நினைப்பி னூடாகச்
செம்மைபெற வீற்றிருக்குஞ் செவ்வேளே—கொம்மை
கொங்கையிள மானிருவர் கூடிவிளை யாடல்புரி [பெறுங்
செங்கமல மான்மருகா! செந்தூரா!—திங்களுறுஞ்

செஞ்சடையான்! மைந்தா! செழுஞ்சேந்தா! அன்பர்கள்
நெஞ்சடைய நேரா நெடும்புகழாய்—தஞ்சமுற்ற
கீரற் கருள்வோய்! கிரவுஞ்ச மாமலைக்கும்
சூரற்குந் தொட்ட சுடர்வேலா—நீருற்ற
வெண்ணிலாக் கண்டாள் விளங்கிழையா ளவ்வுழையே
வெண்ணிலா நொந்தாள் இரங்குவாள்—புண்ணுலாம்
வாளிக்கும் செவ்வந்தி மாலைக்கும் சித்தசன்பூ
வாளிக்கு மஞ்சிவஞ்சி வைகுவாள்—வாளிட்ட
கோலப்பாய் நீத்துக் குலவுதரை மேல்வளர்வாள்
வேலப்பா சொப்பனத்தும் மேவியுனை—வேலப்பா

வேலப்பா வேலப்பா வென்றே புலம்பியெனை
யேலப்பா வென்றே யிசைக்கின்றாள்—கோலக்
கருவிளையும் போலிருந்த கண்ணுமின்று முத்தக்
கருவிளையும் வாரிக் கடுத்தாள்—பொருவிளைவு
கொண்ட விளமுலையின் கோலங் கழிந்துடலம்
மண்டு பசலை மருவினாள்—கண்டபொழு
தெல்லாம் படுக்கையுற லேதென்று லன்னவளைச்
செல்லார் பொழில்நிறையும் செந்தூரா—செல்லலின்றி
எல்லா ரகத்தினிலு மெங்கெங்கு நிற்கின்ற
கல்லார மார்பக் கடவுளே—பொல்லாத

ஆசாரக் கோவை யறிந்தனையோ ஏழையென்னை
நீசாரா தேகுதற்கு நேர்ந்ததென்பாள்—மாசாரா
ஆதரவால் மேனி அடைய மெலிவாகி
ஊத உலையும் உடலானாள்—ஆதலினால்
போதோடு சென்றவளைப் புல்லிப் புரந்திடுக
மாதேவி தந்த மதலையே—நீதமுடன்
இன்ன செயலால் இவளுயிரை யீவதல்லால்
சொன்னச் சிறுமதியின் சூடவிப்பாய்—வன்னமிகு
கண்ணின் கடுமாரி நீக்கிக் கவினிப்பாய்
எண்ணுங் குழலும் இனிதாகும்—நண்ணியே

௩

தங்கிக் கழியாத் தனியானை போலுடற்றுங்
கங்குலதுவுங் கழியுமே—சிங்கியடி
காண்கின்ற சேடியரும் காணும் செவிலியுடன்
மாண்புடைய தாயும் மருவுவரே—பூண்கின்ற
யாணர் கலங்களுடன் ஆய்தொடியு மின்றென்னைப்
பேணி மகிழ்வு பெருகுவளே—தூணனைய
அன்பருளந் தேடி ஆண்டாண் டுறைகின்ற
கொன்பகுவேல் கைக்கணிசெய் குஞ்சரமே—அன்புடனே
சென்றிடுக வன்றிச் செலவு தடைபடுமேல்
கன்றிடா துன்றூர் கனிந்துதவில்—துன்றிநான் 210

முன்னாகச் சென்றுன் வரவு மொழிவேன்பின்
கண்ணாலச் செய்தியையும் கட்டுரைப்பேன்—பெண்ணாவா
உன்மேல் மயலா லுயிரிழந்தாள் என்றபழி [ள்
துன்னாமல் காப்பேன் துயர்காப்பேன்—என்னவே
நல்லசம யந்தெரிந்து நண்ணுமென்றன் மையலெலாம்
சொல்லித் துயர்தீர்ப்பை கோதையே—கல்லின்மே
லுன்னை யெழுதி உறவணங்கி யென்ஞான்றும்
மன்னித் துதிப்பேன் வனபயிலே—உன்னைநான்
தாயாகத் தந்தையே தானாகக் காக்கின்ற
சேயாகப் பேணிச் செழிப்புறுவேன்—ஓயாத 220
மாமாலை யிமாலை வாராமுன் கந்தனணி
பூமாலை வாங்கிப் புகு. 222

இனாமாக இந்தப் புஸ்தகம் கிடைக்குமிடங்கள்.

**பத்மா & கம்பெனி,**

பிரிண்டர்ஸ் & பப்ளிஷர்ஸ்

நெம். 17, சங்குராமசெட்டி தெரு சென்னை.



**சுப்ரமண்யம் & கம்பெனி**

எலக்ட்ரிகல் இஞ்சினீர்ஸ் & காண்டிராக்டர்ஸ்

நெ. 17, சங்குராம செட்டி தெரு, சென்னை.



**ஞானபோதினி பிரசுராலயம்,**

சௌகார்பேட்டை, சென்னை.

The Kendan Press, 32, Broadway, Madras.